உ

குருபாதம்

# ஞானசம்பந்தம்

## தருமையாதீனத் திங்கள் இதழ்

லர் 29 ] சௌமியஆண்டு பங்குனித்திங்கள் 10—4—70 [ இதழ் 5

சென்னைப் பல்கலைக்கழகத் துணைவேந்தர்
உயர்திரு. நெ. து. சுந்தரவடிவேலு அவர்களுக்கு



தருமையாதீனம் ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணி அவர்கள்
பொன்னாடை போர்த்து ஆசி அருளல்

தருமையாதீனக் குருமுதல்வர்



ஸ்ரீ குருஞானசம்பந்த சுவாமிகள்

உ

குருபாதம்

# ஸ்ரீ குருஞானசம்பந்தர் அருள்வாக்கு

மனவாக்குக் காயமுயிர்
 மன்னியசைப் பானும்
அனமாதி போகமளிப்
 பானும் — நனவாதி
கூட்டிவிடு வானுமுத்தி
 கூட்டிடுவா னும்பிறப்பில்
ஆட்டிவிடு வானும்
 அரன். (86)

---

ஆசிரியர் :

வித்துவான்
சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள்

துணையாசிரியர் :

மகாவித்துவான்
சி. அருணைவடிவேல் முதலியார்

---

உ

குருபாதம்

# "ஞானசம்பந்தம்"

## தருமையாதீனத் திங்கள் இதழ்

மலர் 29 | 10-4-70 | இதழ் 5

## உட்பொருள்







ACC-NO-34353

உ

குருபாதம்

# ஞானசம்பந்தம்

| மலர் 29 | சௌமிய – பங்குனி - 10—4—70 | இதழ் 5 |
|---|---|---|

திருச்சிற்றம்பலம்

பொன்றயங் கிலங்கொளிந் நலங்குளிர்ந்த புன்சடை
பின்றயங்க ஆடுவாய்! பிஞ்ஞகா! பிறப்பிலீ!
கொன்றையம் முடியினாய்! கூடலால வாயிலாய்!
நின்றயங்கி யாடலே நினைப்பதே நியமமே,

–சம்பந்தர்

## வேளைவென்ற விமலன்

'இன்பம் வருவதும், துன்பம் வருவதும் இயற்கை' என்று நாம் பொதுவாகச் சொல்லிவிடுகின்றோம். ஆயினும், அவை இயற்கையல்ல; செயற்கையே. ஏனெனில், அவை இயற்கையாக இருப்பின், இன்பத்தை அடைவதற்கும், துன்பத்தைப் போக்குவதற்கும் நாம் முயற்சியை மேற்கொள்ள வேண்டுவதில்லை. ஆகவே, சில பொருள்களால் இன்பமும், சில பொருள்களால் துன்பமும் விளைகின்றன என்பதும், அவற்றுள் இன்பத்தைத் தரும் பொருள்களைப் பெறவும், துன்பத்தைத் தரும் பொருள்களை ஒழிக்கவும் நாம் முயற்சி எடுத்துக்கொள்கின்றோம் என்பதும் தெளிவு. இம்முயற்சிகள் கைகூடினால் அவற்றை 'வெற்றி' என்கின்றோம்.

இன்பத்தைத் தரும் பொருள்களை அடைவதும் வெற்றியே என்றாலும், அதை நாம் மிகுதியாக, 'வெற்றி' என்று குறிப்பிடுதல் இல்லை. இன்பத்திற்குத் தடையாக — துன்பத்தை அடைவிப்பனவாக இருக்கும் பொருள்களை ஒழிக்கும் முயற்சி பயன்படும்பொழுது அதைத்தான் மிகுதியாக, 'வெற்றி' என்று வழங்குகின்றோம். இன்பத்தைத் தரும்பொருள் உறவு அல்லது நட்பு ஆகின்றது. இன்பத்திற்குத் தடையாய்த் துன்பத்தைத் தரும்பொருள் பகை ஆகின்றது. உறவினர் அல்லது நண்பரை அடைவதைவிட, பகைவரை அழிப்பதையே பெரும்பான்மையும் 'வெற்றி' என்று கூறுதல் வெளிப்படை.

இத்தகைய வெற்றிக்கு வேண்டப்படுவன, அஞ்சாமை, அறிவு, ஊக்கம், வலிமை, முயற்சி முதலாகப் பல. அவை அனைத்தும் இருப்பினும் சில வேளைகளில் வெற்றி கிடையாமற் போகின்றது. வெற்றியில்லையேல், இன்பம் இல்லை. ஆகவே, வெற்றி என்பது யாவர்க்கும் இன்றியமையாததாகின்றது.

'வெற்றி' என்பது அரசர்க்குமட்டுமே போரில் கிடைக்கின்ற ஒன்று என்று பொதுவாக நாம் நினைக்கின்றோம். ஆயினும், உண்மை அவ்வாறில்லை. ஒவ்வொருவருக்கும் அவரவரது துறையில் வெற்றி உண்டு. வெற்றியை, 'வாகை' என்று கூறும் பழந்தமிழ் இலக்கண நூலாகிய தொல்காப்பியம், அரசர் பெறும் வெற்றியைமட்டும் 'வாகை' என்று குறியாமல், பலதுறை மக்களும் அவ்வத்துறையில் மேம்பட்டு விளங்குவன பலவற்றையும் 'வாகை' எனக் குறிப்பிடுகின்றது. 'பார்ப்பன வாகை, அரச வாகை, வாணிக வாகை, வேளாண் வாகை, தாபத வாகை, அறிவன் வாகை, பொருந வாகை' இப்படி இன்னும் பல வாகைகள் அந்நூலில் சொல்லப்படுகின்றன. எனவே, இத்தகைய வெற்றிகளுள் ஒன்றும் இல்லையேல், யாருக்கும் எந்த வகையான வாழ்வும் இல்லை என்பது புலனாகும்.

வாழ்க்கையில் ஒவ்வொருவரையும் இடைமறிக்கின்ற தடைகளே பகை. இப்பகையால் விளையும் துன்பத்தை 'இடுக்கண்' என்றும், அவ்விடுக்கணுக்குச் சிறிதும் அஞ்சுதல் கூடாது' என்றும் திருவள்ளுவர் குறிக்கின்ருர்.

"இடுக்கண் வருங்கால் நகுக; அதனை
அடுத்தூர்வ தஃதொப்ப தில்"

வாழ்க்கையில் ஒவ்வொருவருக்கும் எத்துணையோ இடுக்கண்கள் கண்கூடாக நிகழ்கின்றன. அவற்றிற்கெல்லாம் அஞ்சாது ஈடுகொடுத்து, அவ்விடுக்கண்களை வென்று வாகைபுனைவோர் எத்துணைப்பேர்? 'மிகச்சிலரே' என்று சொல்லிவிடலாம். இடுக்கண்களுக்கு ஈடுகொடுக்க மாட்டாது உள்ளம் உடைந்து தோல்வி உறுகின்றவரே பெரும்பான்மையோர். உள்ளம் உடையாது நின்று வெற்றி காண்பவரே 'ஆடவர்' என்றும், 'வீரர்' என்றும் எல்லாராலும் புகழப்பெறுகின்றனர். மக்கள் வீரத்தை அல்லது வெற்றியை எந்த அளவு விரும்பிப் போற்றுகின்ருர்கள் என்பதற்கு, அவர்கள் தாங்கள் வழிபடும் கடவுளர்களையும் வீர வடிவத்திலே வைத்து வழிபடுவதும், அக்கடவுளர்க்குச் சொல்லப்படும் பெருமைகளில், தீயோரை அழித்த பல வரலாற்றைச் சிறந்தெடுத்துப் போற்றுவதுமே போதிய சான்ருகும்.

'இந்திரனது வச்சிராயுதம் மலைகளையும் அறுக்கும்' என்றும், 'மாயோனது சக்கரப்படை உலகத்தையே அழிக்கும்' என்றும் புகழப்பெறுவதைக் கேட்கின்ருேம். கிரௌஞ்ச கிரியைப் பொடிபடுத்திச் சூராதி அசுரர்களை அடியோடு அழித்த முருகனது வேலாயுதத்தை வியந்து போற்ருதவர் யாவர்! இவற்ருலெல்லாம் மக்களுக்கு வெற்றியில் உள்ள விருப்பம் இனிது விளங்குவதாம்.

புறப்பகையை வெல்லும் வீரம் இவ்வாறு புகழப் பெற்ருலும், இதைவிடப் பன்மடங்கு சிறப்புடையது அகப்பகையை வெல்லும் வீரம். அகப்பகை 'காமம், குரோதம், உலோபம், மோகம், மதம், மாற்சரியம்' என்னும் ஆறுமாம். இவற்றைத் திருவள்ளுவரும், 'குற்றம் கடிதல்' என்னும் அதிகாரத்தில் குறிப்பிட்டு, 'இவற்றைத் தன்னிடமிருந்து நீக்குவதில் முதற்கண் அரசன் வெற்றிபெறுதல் வேண்டும்' எனக் கூறுகின்ருர். "அகனமர்ந்த அன்பினராய் அறுபகைசெற்று ஐம்புலனும் அடக்கி" என்பது திருஞானசம்பந்தர் திருமொழி. மக்கள் இவற்றை வெல்லவேண்டும் எனவே, இவை இயல்பாக இல்லாதிருத்தலும், தன்னை அடைந்தவர்கட்கு இவைகளை இல்லையாகச் செய்தலுமே கடவுள் தன்மை என்பது புலப்படும். சூரன் முதலியோரை அழித்தற்கு ஏவிய முருகனது வேல், 'அதற்குமட்டுமன்று; அடியவர்களது வினையை அழிப்பதற்கும் ஏவப்படும்' என்பதை அருணகிரியார் "வினையோட விடும் கதிர்வேல்" என்று குறிப்பிடுதல் காணலாம்.

அறுபகைகளுள் முதலாவது காமம். இதனை வென்ருரே 'பெரியோர்' எனப்படுவர் என்றற்குத் திருவள்ளுவர் இதனை, 'சிறுமை' என்னும் சொல்லாற் குறிப்பிடுகின்ருர். தேவர் உட்பட இச்சிறுமையுள் அகப்படாதவர் இல்லை. 'இந்திரன் இதனல் கௌதமரது சாபத்திற்கு உள்ளாயினன்; பிரமன் தான் படைத்த திலோத்தமையைப் பின்தொடர்ந்து ஓடினன்; மாயோன் விருந்தை என்பவள் இறந்த சாம்பலில் புரண்டான்' என்றெல்லாம் புராணங்கள் கூறுகின்றன. ஆயினும், அத்தகைய புராணங்கள் சிவபிரான் ஒருவனையே காமனையே வென்றவனுகக் கூறுகின்றன.

'சூரபதுமன் ஆட்சிபுரிந்த காலத்தில் அவனது கொடுமையைப் பொறுக்கமாட்டாத இந்திரன், அவனுக்கு வரங்கொடுத்த சிவபெருமானை நோக்கித் தவம்

புரிய, அப்பெருமான் அவன்முன் தோன்றி நமக்குப் பிறக்கும் குமாரன் சூரனுதியரை அழித்து உங்கள் துன்பத்தைப் போக்குவான்' என்று வரங்கொடுத்து மறைந்தான். பின்பு அப்பெருமான் சனகர் முதலிய முனிவர் நால்வர்க்கு ஞானத்தை அருளத் தென்முகக் கடவுளாய் யோகநிலேயை மேற்கொண்டான். அவ்வமையம் மலேயரையன் தவத்திற்காக உமையம்மை அவனுக்கு மகளாகச் சென்று, இமய மலேயில் தவம் செய்து கொண்டிருக்கின்ருள். இப்படிக் காலம் நீட்டிக்க இந்திரன் தன் கருத்து நிறைவேருமைக்கு வருந்திச் சிவபிரானே யோகத்தின் நீக்கி மோகத்திற்கு உள்ளாக்குதல் எவ்வாறு என்று கவலேயுற்ற பொழுது, திருமால் தம் மகனுகிய காமனேச் சிவபெருமான் மீது ஏவுமாறு சூழ்ச்சி கூறினுர். பிரமன் அவ்வாறே அவனே அழைத்துச் சிவபெருமானே மோகத்திற்குள்ளாக்கப் பணிக்க, அவன் பெரிதும் அஞ்சி மறுக்கவும், அச்சுறுத்தி விடுத்தான். மாரவேள் கைலேசென்று யோகத்தில் இருந்த சிவபெருமான் மீது தனது மலர்க்கணையை ஏவி, அப்பெருமான் விழித்து நோக்கிய நெற்றிக்கண்ணினின்றும் எழுந்த தீயால் எரிந்து சாம்பலாயினுன்; அதனே அறிந்த பிரமன் முதலியோர் தங்களுக்கும் யாது நிகழுமோ என்று அஞ்சி, அப்பெருமானேத் துதித்து நீங்கினர். பின்பு மன்மதன் மனேவி இரதிதேவியது ஆற்ருமைத் துயரத்திற்கு இரங்கிப் பார்வதி திருமணத்தில் அவளுக்கு மட்டும் அவன் உருவுடையவனுய் இருக்க அப்பெருமான் அருள் புரிந்தான்' என்பது அவ்வரலாறு.

காமம், குரோதம் முதலிய குற்றங்கள் பலவும் மும்மல காரியமாய் நிகழ்வன. ஆகவே, மலம் இல்லாத விமலனிடத்தில்தான் இவை நிகழ்வதில்லே; மலமுடைய உயிர்கள்மாட்டு இவை இருத்தல் இயல்பே. அதனுல், மலமுடைய உயிர்கள் பலவற்றிற்கும் மலம் இல்லாத விமலனே புகலிடம் என்பதற்கு இவ்வரலாற்றைத் திருநாவுக்கரசர் தமது தசபுராணத் திருப்பதிகத்துள் எடுத்தோதி யருள்கின்ருர்.

" கழைபடு காடு தென்றல் குயில்கூவ அஞ்சு
கணையோன் அணைந்து புகலும்
மழைவடி வண்ணன் எண்ணி மகவோனை விட்டம்
மலரான தொட்ட மதனன்
எழில்பொடி வெந்து வீழ இமையோர் கணங்கள்
எரிஎன் றிறைஞ்சி அகலத்
தழல்படு நெற்றி ஒற்றை நயனம் சிவந்த
தழல்வண்ணன் எந்தை சரணே."

(மன்மதன் செல்லும்பொழுதே காடுகளில் தென்றல் வீசிற்று. குயில்கள் கூவின. எனவே, உயிர்கள் பலவும் மோகத்திற்குள்ளாயினமை விளங்குகின்றது. மகவோன்–மகன். விட்டு–விட்டபின்பு. எழில்–அழகுடைய உடம்பு. பொடிவெந்து–பொடியாக வெந்து.)

" மால்தான்-எண்ணி வேள் மதனை ஏவ எரிவிழித்து "

என்று இதனைச் சிவஞானசித்தியும் எடுத்துக்காட்டுகின்றது. வேள்–விருப்பம். அது, 'விரும்பப்படுவன்' என்னும் பொருளில் பிறர்க்கு வழங்கினாலும், மன்மதனுக்கு, 'விருப்பத்தை – ஆசையைத் தூண்டுபவன்' என்னும் பொருளிலும் வழங்குவதாகும். ஆகவே வேளை வென்றவன், 'ஆசையையேயன்றி, அதற்குரிய காரணத்தையும் வென்றவன்' என்பது விளங்கும். அதனால், சிவபெருமானை, வேளை வென்ற விமலனைக் கொண்டு வழிபட்ட ஆன்றோரது அருங்கருத்தை உணர்ந்து, அவனையே சரணாக அடைந்து, ஐம்புல அவாவை வென்று, அருளின்பம் பெற்று வாழ்வோமாக.



உ

குருபாதம்

குருவருள்

# அருள்நெறியும் அறநெறியும்

## நீத்தார் பெருமை

மக்கட்குப் பெருமை தருவன கல்வி, செல்வம், தலைமை, ஒழுக்கம் முதலாகப் பல. ஆகவே, அவற்றுள் ஒன்றையோ, பலவற்றையோ அடைந்தவர் பெருமையுடையவர் ஆகின்றனர். ஆயினும், எல்லாரது பெருமையையும்விட, நீத்தாரது பெருமையே உயர்ந்த பெருமையாம். நீத்தார் உலகியலைத் துறந்தவர். * 'துறவிக்கு வேந்தன் துரும்பு' என்பது பழமொழி.

உலகில் பெறத்தக்க பயன்களை முற்றிலும் பெற்று வாழ்பவன் வேந்தன். ஒருவேளை உணவுக்குக்கூடக் கையில் ஒன்றும் இல்லாது இருப்பவர்களே துறவிகள்.

" இயல்பாகும் நோன்பிற்கொன் றின்மை; உடைமை
மயலாகும் மற்றும் பெயர்த்து ".

என்று திருவள்ளுவர் துறவின் நிலைமையை இனிது விளக்கினர். இப்படி எல்லாப் பொருளும் உடைய அரசனைவிட, ஒரு பொருளும் இல்லாத துறவிகள் மிக்க பெருமை உடையவராதல் எப்படி என்பதைவிளக்க, பட்டினத்து அடிகளைப்பற்றிய வரலாறு ஒன்று உண்டு.

" பாரனைத்தும் பொய்யெனவே பட்டினத்துப் பிள்ளையைப் [போல்
ஆரும் துறக்கை அரிதரிது "

என்று தாயுமானவர் கூறுகின்றபடி, பட்டினத்தடிகளைப்போலத் துறவு பூண்டவர் உலகத்து மிகச் சிலரே. பெரும்பான்மையான

* உயிர் நீத்தவரை 'நீத்தார்' என்று இப்பொழுது சிலர் சொல்லுதல் மரபுக்கு மாறுனதாகும்.

துறவிகள் தங்கள் இல்லற வாழ்க்கையில் அடைந்த துன்பம் காரணமாகவே துறவு நிலையை எய்தினவராய் இருப்பர். அத் துன்பம், வறுமை, குடும்பத்தில் ஒற்றுமை இன்மை அல்லது தங்கட்குக் குடும்பத்தில் அதிகாரம் இன்மை முதலிய காரணங் களுள் ஏதாவது ஒன்றால் விளைந்ததாக இருத்தல் கூடும். ஆனல், பட்டினத்தடிகளுக்கு அவரது இல்லற வாழ்வில் யாதொரு குறையும் இல்லை. நிறைந்த செல்வம் உடையவர். கடல் வாணிகத்தில் சிறந்து விளங்கினர். அவை அனைத் திற்குந் தாமே தலைவர். மனைவியார் அருந்ததியே எனத் தக்க கற்பிற் சிறந்தவர். அவ்வாறிருந்தும் ‘இல்வாழ்க்கை வேண்டா’ என்று சொல்லித் தம்மிடம் இருந்த செல்வத்தை எல்லாம் அனைவரும் கொள்ளையாகக் கொண்டு போகும்படி தெருவில் அள்ளி அள்ளி எறிந்துவிட்டுக் கையில் ஒன்றும் இல்லாத ஆண்டியானர். காரணம் வேறென்றில்லை, இவ ருக்குச் சில்லாண்டுகள் திருமகனராகவந்திருந்த மருதவாணர் “காதற்ற ஊசியும் வாராது காணும் கடைவழிக்கே” என்ற ஓர் உபதேசமொழியை எழுதி இவரிடம் சேர்ப்பித்து மறைந் ததே இவர் துறவுபெறக் காரணமாயிற்று.

இவரது மாளிகையின் நுழைவாயிலில் வெள்ளித்தூண் களும், வெள்ளிக்கதவும் வைக்கப்பட்டிருந்தனவாம். அவ் வழியாக உலாச்சென்ற அரசன் அதைக்கண்டு. ‘குடிமக்களுள் ஒருவர் இல்லத்தில் இவ்வாறிருப்பது குற்றம்’ என்று, அவை களை உடனே எடுத்துவிடுமாறு உத்தரவிட்டானும். அதை யறிந்த வெண்காடர் (பட்டினத்து அடிகள்) வெள்ளித் தூண் களையும், கதவையும் எடுத்துத் தெருவில் எறிந்துவிட்டுப் பொன் தூண்களையும், கதவையும் பொருத்தியிருக்க, மறுநாள் அவ்வழியாக வந்த அரசன் இச்செயலைக் கண்டு வெட்கம் உற்றானும்.

இத்தகையபெருஞ்செல்வத்தில் இருந்த இவர், சில்லாண்டு களுக்குப் பிறகு ஒன்றும் இல்லாத ஆண்டியாய் ஒரு மரத்தடி யில் உட்கார்ந்திருந்தபொழுது, அரசன் சென்று வணங்கிக் கைகட்டி வாய்புதைத்து நின்று, ‘அளவற்ற செல்வத்தை அள்ளி அள்ளி இறைத்துவிட்டு இங்கு வந்து என்ன அடைந் தீர்’ என்று கேட்க, அதற்கு அடிகள், ‘நாம் இருக்க, நீர் நிற்க உள்ள நிலைமையை அடைந்தோம்’ என்று கூறினர்

என்பது ஒரு செவிவழிச் செய்தியான வரலாறு. பெருஞ் செல்வத்தில் இருந்தபொழுது அடிகள் அரசன் கட்டளைக்குக் கீழ்ப்படிய வேண்டியிருந்தது. ஆண்டியானபொழுது அரசன் அவருக்குப் பணியவேண்டிய நிலை உண்டாயிற்று. இதுதான் துறவின் பெருமை.

பட்டினத்து அடிகளது துறவு போன்ற உண்மைத் துறவு ஞானத்தினாலே உண்டாவதாகும் என்பது அவரது வரலாற்றிலேயே தெரிகின்றது. ஞானமாவது, 'நிலைத்த பொருள் இது; நிலையாத பொருள் இது' என்று உள்ளவாறு உணர்ந்து, நிலையாத பொருளை விடுத்து, நிலைத்த பொருளைப் பற்றுவதாகும்.

இவ்வாறு உணர்ந்து பற்றும் நிலை நல்லாசிரியர் வழியாக அன்றி வாராது என்பது பட்டினத்தடிகட்கு மேற்சொல்லியவாறு கிடைத்த உபதேசத்தால் விளங்கும். ஆகவே, நல்லாசிரியரை அடைந்து உண்மை ஞானம் பெற்று நிலைத்த பொருளைப் பற்றப் பற்ற, நிலையாத பொருளில் உள்ள பற்று முற்றிலும் நீங்குவதாகும்.

"பற்றுக பற்றற்றான் பற்றினை; அப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு"

என்கின்றார் திருவள்ளுவர்.

"பற்றை அறுப்பதோர் பற்றினைப் பற்றில்அப்
பற்றை அறுப்பரென் றுந்தீபற"

என்பது திருவுந்தியார். பற்றற்றான் பற்றினை விடாது பற்றிக் கொண்டிருந்தால் உலகப் பற்றுப் பற்றாதொழியும்; அவனைப் பற்றும் பற்றுச் சிறிது நழுவினாலும் உலகம் வந்து பற்றும். ஆகவே, பற்றற்றான் பற்றினை விடாது பற்றுகின்றவரே உலகப் பற்று நீங்கினவராவர் என்பதைத் திருவுந்தியார் என்னும் சீரிய நூல்,

"எட்டுக்கொண் டார்தமை தொட்டுக்கொண் டேநின்றார்
விட்டார் உலகம்என் றுந்தீபற;
வீடேவீ டாகுமென் றுந்தீபற"

என்பதனுல் விளக்குகின்றது. இந்நிலேயே சார்புணர்ந்து சார்புகெட ஒழுகும் நிட்டை நிலையாகும்.

“ தலைப்பட்டார் தீரத் துறந்தார் ; மயங்கி
வலைப்பட்டார் மற்றை யவர்”

என்னும் குறளில், ‘‘தலைப்பட்டார்’’ என்றும், “தீரத் துறந்தார்” என்றும் சொல்லப்பட்டவர் மேற்கூறிய நிலையை அடைந்தவரே.

இத்தகைய முற்றத் துறந்த முனிவர்கள் உலகத்தையே ஆக்கவும், அழிக்கவும் ஆன பேராற்றல் உடையவராய் இருப்பர் என்பதைத் திருமூலர்,

‘‘ தானே படைத்திட வல்லவ னுயிடும் ;
தானே அளித்திட வல்லவ னுயிடும் ;
தானே சங்காரத் தலைவனு மாயிடும் ;
தானே சிவன்எனும் தனமைய னுமே’’

என்று விளக்குகின்ருர். இத்தகைய ஆற்றல் இருப்பினும் அதனை அவர்கள் கையாள்வதில்லை என்பதை,

‘‘ எல்லாம் அறியும் அறிவுறினும் ஈங்கிவர்ஒன்
றல்லா தறியார் அற ’’

என்னும் திருவருட் பயனுல் அறியலாம்.

‘ஞானிகள் உறங்கினுல் உலகம் உறங்கிவிடும். ஞானிகள் விழித்தால் உலகம் விழிக்கும். ஞானிகட்குச் சினம் உண்டாகாது ; உண்டாகுமாயின் உலகம் தாங்காது’ என்பதை,

“ தாம்அடங்க இந்தத் தலம்அடங்கும் : தாபதர்கள்
தாம்உணரின் இந்தத் தலம்உணரும் — தாம்முனியில்
பூமடந்தை நில்லாள் ; புகழ்மடந்தை போயகலும் ;
நாமடந்தை நில்லாள் நயந்து ”

என்று விரிக்கின்றது திருக்களிற்றுப்படியார். இதனையே,

" குணமென்னும் குன்றேறி நின்ருர் வெகுளி
கணமேயும் காத்த லரிது "

என்றும்,

" ஏந்திய கொள்கையார் சீறின், இடைமுரிந்து
வேந்தனும் வேந்து கெடும் "

என்றும் கூறினர் திருவள்ளுவர். இதனுள் " வேந்தன் " என்றது இந்திரனை என்பதும், 'அவன் கெடும்' என்றது நகுடன் வரலாறு பற்றி என்பதும் பரிமேலழகர் உரையான் உணர்க. இன்னும்,

" ஐந்தவித்தான் ஆற்றல் அகல்விசும்பு ளார்கோமான்
இந்திரனே சாலுங் கரி ",

" நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து
மறைமொழி காட்டி விடும் "

என்னும் குறள்களால் ஞானிகளது பெருமையைத் திருவள்ளுவர் இனிது விளக்குகின்ருர்.

ஞானிகட்குப் பிறர் வழிபாடு செய்யினும், இடையூறு செய்யினும் அவைகளை இறைவன் தனக்குச் செய்யப்பட்டனவாகவே கொண்டு அவற்றிற்குரிய நன்மை தீமைகளை அவர்கட்கு மிக விளைப்பான் என்பதை,

" சிவனும்இவன் செய்தியெலாம் என்செய்தி என்றும்,
செய்ததெனக்கு இவனுக்குச் செய்ததென்றும் "

எனக் கூறுகின்றது. இவற்றிற்கு இலக்கியமாக ஞானசம்பந்தர் மதுரையில் எழுந்தருளியிருந்த திருமடத்தில் தீயிட்ட சமணரது செயலுக்கு உடந்தையாயிருந்தமைபற்றி, அத் தீ பாண்டியனைச் சென்று பற்றினமையை அறிகின்ருேம். அவர் பின்பு அப்பாண்டியன்மேல் அருள்நோக்கம் வைத்து வெப்பு நோயை நீக்கி, " வேந்தனும் ஓங்குக " என்று வாழ்த்திய பொழுது, 'ஓங்குக' என்னும் சொல்லாற்றலால் அவனது உடம்பில் இருந்த கூனும் நீங்கி 'நெடுமாறன்' ஆயினமையும் அறியற்பாலது.

இவற்ருல் மெய்யுணர்வால் உலகத்தை முற்றத் துறந்த நீத்தாரது பெருமையே எல்லாப் பெருமைகளினும் சிறந்தது என்பது இனிது விளங்குதல் பற்றி,

"இருமை வகைதெரிந்து ஈண்டு அறம்பூண்டார்
பெருமை பிறங்கிற் றுலகு"

என்ருர் திருவள்ளுவர். ஆகவே, அருள்நெறியில் போற்றப் படும் ஞானிகளது பெருமையே அறநெறியிலும் சிறந்ததாகப் போற்றப்படுதலே உணர்ந்து ஞானம் ஒன்றையே விரும்பி உலகம் உய்வதாக.

---

## பாடப் பாடத் தேனூறும்!

வேலன்

எடுப்பு

பாடப் பாடத் தேனூறும் — முருகன்
பதமலர் நாடோறும் பைந்தமிழ்க் கவியால் (பா)

தொடுப்பு

கூடக்கூட நெஞ்சில் குளிர் ஏறும் — புகழ்
கூடிக்கூடி நாவில் நயம் மீறும் (பா)

முடிப்பு

திருத்தனிச் சுனை நீர் தனைப்பருகி — தமிழ்
தெளிந்த உணர்வொடு மனமுருகி — நல்
கருத்துடன் விழிமலர் தனைமூடி — ஒளிக்
கந்தன் அடியிணை மலர்நாடி (பா)

அன்பினிற் சிக்கும் இளங்குழவி — அவன்
அன்னையும் இளைய பழங்கிழவி — நல்ல
இன்பினில் துணைவியர் அருகாக — அவன்
இருக்கும் எழிலினை அழகாக (பா)

குருட்டு விழிக்கும் ஒளிதருவான் — அவன்
கும்பிட்ட பேருக்கு வழிதருவான் — நம்
பொருட்டுப் புவிமிது வடிவெடுப்பான் — பாவ
புண்ணியங் களுக்கு முடிவெடுப்பான் (பா)

# சிரித்தபடி வாராயோ, புதிய ஆண்டே!

புலவர் வேலன்

எப்படித்தான் ஓடிற்ரு என்றே யெண்ணி
இதயத்தைப் பார்க்கின்றேன்; தெரிய வில்லை!
அப்படித்தான் விரைந்ததுவே; துன்பம் எல்லாம்
அகற்றிவிட்டுச் சென்றதுவா? துயரம் தீர்ந்து,
செப்படித்தான் என்றுரைக்க இன்பம் மேவிச்
செழிக்கவைத்துப் போயிற்ரு? சௌம்ய ஆண்டு?
முப்படித்தான் எனமொழிய அறத்தின் ஆட்சி
முன்னையினும் பலமடங்காய் ஆக்கிற்ரு தான்! 1

காலமகள் விரித்திருக்கும் வலையில், ஆமாம்;
கானகத்து மயில்போலே ஒவ்வோ ராண்டும்
கோலமகள் சித்திரையாம் ஒளிம லர்ந்து,
குலவிடுவை காசியெனும் அழகில் தோய்ந்து,
சீலமகள் ஆனியின்பின் ஆடியென்னும்
சீர்மருவி, ஆவணியில் தழைத்து, வாய்ந்த
ஞாலமகள் ஓங்கிடவே புரட்டா சிக்குள்
நயந்தழுவி, ஐப்பசியில் குளிர்ந்து நின்றே. 2

கார்த்திகையாம் கவின்சேர்ந்தே, அன்பு மேவிக்
கருதுகின்ற மார்கழியில் தூய்மை யார்ந்து,
சீர்த்தையில் வளம்பெருகி மாசி யென்னும்
செழுமையிலே பனிபடர்ந்தே, உலகம் எல்லாம்
வார்த்தைசொலப் பங்குனியில் "செல்வேன்" என்று,
வாய்மொழிந்து, சென்றிடுதல் வழக்கமன்ரு?
கோர்த்துதிர்த்த பனிமுத்தாய்க் கண்ணீர் சிந்திக்
கொடும்பிரிவால் உளநைந்தே வையம் நையும்! 3



வருகின்ற ஆண்டே,கேள்! உலக மீதில்,
வஞ்சனைகள் புறமாறி அறமே எங்கும்
தருகின்ற இன்பங்கள் தழைக்க வைப்பாய்!
தமிழகத்தும் அன்புநெறி செழிக்க வைப்பாய்!
பெறுகின்ற திருப்பெயரோ எளிமை காட்டிப்
பிறங்கிடும்; சா தாரண ஆண் டென்றுகொண்டாய்!
உறுகின்ருய்; உள நிமிர்த்து! தோள்உ யர்த்து!
ஒருலகம் காண்பதற்கு நெறியைக் காட்டாய்! 4

கோணலுடை மனங்களெலாம் நிமிரட் டும்; ஆம்!
கொடுமையெலாம் மங்கட்டும்! இன்பம் பொங்கி
ஆணழகும் பெண்ணழகும் வைய வாழ்வில்,
அறவாழ்வில் மிளிரட்டும்! கவிதை யாறு
பாணரெலாம் பாட்டெடுக்கக் குமிழியிட்டுப்
பாயட்டும்! ஒழுக்கநெறி பாரில் ஓங்கிச்
சேணவரும் பாராட்டச் சிறக்கட் டும்! நீ
சிரித்தபடி வாராயோ, புதிய ஆண்டே! 5

நாயன்மார் ஆழ்வார்கள் இயேசு புத்தர்
நவின்றவெலாம் வையகத்துச் செழிக்க வைப்பாய்!
போயன்பிற் சாதாரண மாந்த ரெல்லாம்
பூரிக்க நின்திருப்பேர் வழிகாட் டாதோ?
தாயன்பிற் சான்ருேர்கள் சமுதா யத்தைத்
தழுவிநெறி காட்டிடவே பாரோங் காதோ?
சேயன்பிற் புத்தாண்டே! கவிதை யென்னும்
தேனூலே வாயினிக்க வாழ்த்து வோமே! 6



# சித்தாந்த விஞவிடை

தருமையாதீனத் தமிழ்ப்புலவர், சித்தாந்தக் கலைமணி,
மகாவித்துவான், முதுபெரும்புலவர்,

**திரு. சி. அருணைவடிவேலு முதலியார்.**

( மலர் 29, இதழ் 4, பக்கம் 212 இன் தொடர்ச்சி )

## தசகாரியம்

மாணுக்கன் : தசகாரியத்தைப் பற்றிக் குறிப்பாகக் கூறினீர்கள். அவற்றைச் சிறிது விளக்கியருளல் வேண்டும்.

ஆசிரியர் : சத்திநிபாதத்து உத்தமனுகிய மாணுக்கனுக்கு ஞானசாரியர், 'நீ நின் பருஉடம்பு. (தூலசரீரம்) நுண்ணுடம்பு. (சூக்கும சரீரம்) .நனிநுண்ணுடம்பு (பர சரீரம்) என்னும் கருவி (தத்துவ)க் கூட்டத்தில் அகப்பட்டு அவற்ருேடு வேறுபாடின்றி 'அவைகளே நான்' என மயங்கிநின்ருய்; அங்ஙனம் நின்றமையால், அவைகட்கு உளவாகின்ற தோற்றம், வளர்ச்சி, அழிவு, வலிவு, மெலிவு, பசி, தாகம், நோய் முதலியவைகளை எல்லாம் உன்னுடையனவாகவும், அவற்றைத்தோற்றுவிக்கின்ற பிற உயிர்ப்பொருள், உயிரல்பொருள்களையே உனக்கு உறவு பகைகளாகவும் கருதி, இம்மை மறுமை உலங்களில் பிறந்து இறந்து உழன்று அல்லலுற்ருய்; ஆயினும் இஃது உன் உண்மைத் தன்மையன்று; இவை உனது அறியாமையால் வந்த மயக்கமே. கருவிக்கூட்டம் அனைத்தும் அறிவில்லாத சடப்பொருளாதலின், அவற்றிற்கே தோற்ற அழிவுகளும், வலிவு மெலிவுகளும், பிற மாற்றங்களும் உள. நீ அறிவுடைய சித்துப் பொருளாதலின், உனக்கு உண்மையில் யாதொரு மாற்றமும் இல்லை.

இனி நீ இயற்கையில் என்றும் நமக்கு (சிவத்திற்கு) மகன்; அதனுல், நமக்குரிய தன்வயம் உடைமை முதலிய எண்குணங்களும் என்றுமே உனக்கு உரியனவாதலின் அவற்றைப் பெற்று அவற்றுள் முடிவாய் உள்ள வரம்பில் இன்பத்தில் என்றும் ஒரு நிலையாய் இருத்தற்குரியை என்று உபதேசிப்பார்.

பருவம் வாயாத சிறு பெண்ணிடத்தில் ஓர் ஆடவன் சில காதற் பேச்சுக்களைப் பேசின் அவை பொருளற்றனவாய்ப் போதலன்றிச் சிறிதும் பயன்படாமைபோல, சத்திநிபாதம் இல்லாதார்க்கு இவ்வுபதேசத்தைச் செய்யின் பயன்படாதொழியும் என்பது பற்றி நல்லாசிரியர் ஒருவரும் அவர்க்கு இத்தகைய உபதேசத்தைச் செய்யார். இனிப் பருவமுற்ற மங்கையிடத்து அவட்குரியவனாகிய ஆடவன் காதற் சொற்கள் சிலவற்றைக் கூறிய பொழுதே அவள் உள்ளத்தில் அவனையன்றிப் பிறரைப் பொருட்படுத்தாது அவனை அடைதல் ஒன்றையே உடையளாகி விடுவாள். அவ்வாறே நல்லாசிரியரால் மேற்கூறியவாறு உபதேசிக்கப்பெற்ற நன்மாணாக்கர் அப்பொழுதே தம் உடல், பொருள், ஆவி என்பவற்றில் ஒன்றிலும் பற்றில்லாதவராய்த் தம் துன்பம் நீங்குதற்கும், இன்புற்று வாழ்வதற்கும் உரிய வழியை அருளிச்செய்த ஞானாசிரியராகிய சிவபெருமானது திருவடி ஒன்றையே பற்றிக் கிடந்து நிட்டைநிலை எய்திப் பேரின்பம் பெறுவர். இஃது குழவிப் பருவத்தே வேடரிடத்தில் அகப்பட்டு அவரிடமே வளர்ந்த ஓர் அரசகுமாரன், தான் அரசிளங்குமரன்' என்பதையும், 'இவ்வுலக முழுவதும் தனக்கு உரிமை உடையது என்பதையும் அறியாது வேடர்க்குரிய இழி தொழில் புரிந்து காட்டில் உழலுங்காலத்து அவன் சிறுவனாய் உள்ளபொழுது உண்மையை உணர்த்தின் உணரமாட்டான் ஆகையால், அவன் உணர்தற்குரிய பருவம் வருங்காறும் காத்திருந்து, அப்பருவம் வந்தவுடன் அரசன் அவன்பாற் செல்லும் முறையிற் சென்று, உணர்த்தும் முறைமையில் உண்மையை உணர்த்தியவழி அவ்வரச குமாரன் அவ்வேடர் கூட்டத்தை விட்டு அப்பொழுதே விலகித் தன் தந்தையை அடைந்து எல்லா நலங்களையும் எய்துதல்போல்வதாம். அது பற்றியே மெய்கண்டார்,

> 'தம்முதல் குருவுமாய், 'நீ ஐம்புல வேடரின் வளர்ந்து அயர்ந்தனை' என உணர்த்த, (அங்ஙனம் உணர்த்தப்பட்ட உயிர்.) அவ்வைம்புல வேடரை அப்பொழுதே விடுத்து, அன்னியம் இன்மையின் (உணர்த்திய அவ் இறைவன் தனக்கு வேருய் நில்லாது உயிர்க்குயிராய் என்றுமே உடனாய் நிற்றலின்) அவன் திருவடி ஒன்றையே குறியாகக் கொண்டு சென்று அதனை அடையும்'

எனக் கூறினர்.



திருஞானசம்பந்தருக்கு
உமையம்மை பொற்கிண்ணத்தில் பால் வழங்குதல்.



ஞானப்பாலுண்ட திருஞானசம்பந்தர்
தமக்குப்பாலளித்தபெருமானைச் சுட்டிக்காண்பித்தல்.



தமிழ்நாடு அறநிலைய அமைச்சர்
மாண்புமிகு. கே. வி. சுப்பையா பி. ஏ., அவர்கள்
சீகாழி ஸ்ரீ சட்டைநாதசுவாமி தேவஸ்தானத்தில் புதிதாகக் கட்டப்பெறும்
கல்யாண மண்டபக் கால்கோள் விழாக் கல்வெட்டினைத் திறந்துவைத்தல்

திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனத்திற்குச் சொந்தமான
திருக்கடவூர் ஸ்ரீ அமிர்தகடேசுவரசுவாமி தேவஸ்தானத்தில்
எழுந்தருளியிருக்கும்



ஸ்ரீ காலசம்காரமூர்த்தி

திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனம்
ஸ்ரீ ஆனந்தபரவசர் பூங்காவில் எழுந்தருளியிருக்கும்



ஸ்ரீ வனதுர்க்காதேவி

"விட்டு" என்றும், "செல்லும்" என்றும் மெய்கண்டார் தமது நூலின் எட்டாஞ் சூத்திரத்திற் கூறிய இரு செயல்களே, 'தசகாரியம்' எனப்படும் பத்துச் செயல்களாக விரிவு படுகின்றன. அவற்றுள் விடுதல் பாசக் கூட்டத்தையும், பசு போதத்தையுமாம். செல்லுதல் சிவத்தினிடத்திலாம்.

மேற்கூறிய உபதேசத்தைப் பெற்றோர் அனைவர்க்கும் விடுதலும், செல்லுதலும் ஒருவகையாகவே நிகழ்தல் இல்லை அவரவரது தன்மைக்கேற்ப மெல்லவும், விரையவும் நிகழும். ஆகவே, உபதேசத்தைக் கேட்ட பின்னர்ச் சிந்தித்தலிலும், தெளிதலிலும் சிலர்க்குச் சில காலம் கழியும். அதன் பின்பு நிட்டை கூடியவழியும் அந்நிட்டை நிலையில் நீங்காது நிற்போர் மிக மிக அரியராக, மீளவும் தெளிதல் நிலைக்கு வருதலும் நிட்டையிற் செல்லுதலுமாகிய வரவு போக்குகளை உடையவரே பலராவர். அந்நிலையில் உடம்பு நீங்குதற்கண் நிட்டைநிலையினின்று நீங்கப் பெற்றோரே இறைவனோடு இரண்டறக் கலத்தலாகிய சாயுச்ச பரமுத்தியைப் பெறுவர். அந்நிலையில் நிற்கப் பெறுதோர் அபரமுத்தியைப் பெற்றுப் பின்னர்ப் பரமுத்தியை அடைவர்.

## தத்துவ ரூபம் முதலிய மூன்று

ஆசிரியரது உபதேசத்தை நூல்களின் துணைகொண்டும், தம் அறிவுக்குப் பொருந்துமாறு பற்றியும் ஆராய்தலே சிந்தித்தலாகும். அங்ஙனம் சிந்திக்குங்கால் முப்பத்தாறு தத்துவங்களின் இயல்பையும் நூல்களில் சொல்லியவாறே விளங்கிக்கொள்ளும் அளவில் அறிதல் தத்துவ ரூபமாகும். இதில் நிகழ்வது பொது உணர்வே. பின்னர், 'இங்ஙனம் சொல்லப்பட்ட இவை பொருந்துமா' எனத் தன்னறிவில்வைத்து ஓர்தல் தத்துவ தரிசனமாகும். இதில், 'பொருந்தும் என்றும் பொருந்தாது என்றும்' கருதும் இரண்டுபட்ட உணர்வே தோன்றும். இஃது ஐயவுணர்வாதல் வெளிப்படை. அதன்பின், ஆசிரியர் உபதேசித்தபடியும், நூல்களிற் சொல்லியபடியும் தத்துவங்கள் அனைத்தும் ஆன்ம அறிவு இல்வழிச் செயற்படாத சடப் பொருள்களே என்பதும், ஆதலின் அவை ஆன்மா அல்ல; ஆன்மாவின் வேறு' என்பதும் உண்மையாதலை உணர்ந்து வியப்புறுதல் தத்துவ சுத்தியாம். இது துணிபுணர்வு. இத்துணிபுணர்வு பிறந்தபின் உயிர் அச்சடப்பொருள்களை உவர்த்து அவற்றின் நீங்குதற்கு இடைவெளி இன்மையால், இது தத்துவ சுத்தியாதற்குத் தடையின்மை அறிக.

## ஆன்மரூபம் முதலிய மூன்று

தத்துவங்களின் இயல்பை நூல்களிற் சொல்லியவாறு அறிந்து கொள்ளுதல்போல, 'தத்துவங்களோ அல்லது அவற்றின் கூட்டமோ ஆன்மா அல்ல: ஆன்மா வேறு' என்பதையும், அதன் இயல்புகளையும் நுல்களிற் சொல்லியவாறு அறிந்து கொள்ளுதலே ஆன்மருபம். அதன்பின் அவற்றைத் தன் அறிவிற்குப் பொருந்துமாறு ஆராய்தலே ஆன்ம தரிசனம். அவ்வாறு ஆராய்ந்தபொழுது, ஆன்மா தத்துவங்கள்போலச் சடமாகாது சித்தேயாயினும், பிறிதொன்றன் துணையின்றித் தனித்துநின்று அறிய இயலாதது ஆதலின், அதற்கு எஞ்ஞான்றும் துணையாய் உடன்நின்று உணர்த்தி வருவது முதல்வன் திருவருளே' என்பது இனிது விளங்குமாதலின், அவ்விளக்கத்தின் வழி தனக்கென ஒருசெயலும் இன்றி எல்லாம் முதல்வன் செயலாக் உணர்ந்து தன்செயலற்று இருத்தல் ஆன்ம சுத்தி. இவ்வாற்ருல். எந்த ஒன்றையாயினும் 'யான் செய்தேன்' அல்லது 'பிறர் செய்தார்' என்று எண்ணுதலும், ஒன்றை, 'என்னுடையது' அல்லது 'பிறருடையது' என்று எண்ணுதலும் ஆகிய 'யான் எனது என்னும் 'செருக்கு' அற்றெழியும் ஆதலின், இதுவே ஆன்ம சுத்தியாதல் அறிக.

## சிவரூபம் முதலிய நான்கு

தத்துவங்களின் இயல்பு, ஆன்மாவின் இயல்பு இவற்றை நூல்களில் சொல்லியவாறே கொள்ளுதல்போலச் சிவத்தினது பொதுவியல்பு (தடத்த லட்சணம் - உலகத்தை ஐந்தொழிற் படுத்தல்) உண்மை இயல்புகளை (சொருப லட்சணம் - எண் குணம் உடைமை) நூல்களிற் சொல்லியவாறு அறிந்துகொள்ளுதல் சிவருபம். பின்பு அவற்றைத் தன்னறிவிற்குப் பொருந்துமாறு ஆராய்தல் சிவதரிசனம். சிவத்தினது இயல்பு இவ்வாறு அறிவிற்குப் பொருத்தமாதல் தோன்றும் பொழுதே முன்னர்க் கூறிய யான் எனது அற்ற நிலைமை நிலைபெறுதலும், அதனுல் எங்கும் சிவமாய்க் காணும் காட்சியும், அக்காட்சியால் சிவானந்த விளைவும் உளவாகும். ஆகவே, இந்நிலையே சிவத்தை உண்மையில் காணும் சிவதரிசனமாதல் அறிக.

சிவதரிசனம் வாய்த்த பொழுதும் பழைய வாசனை பற்றி 'யான் செய்தேன்; பிறர் செய்தார்; என்னுடையது; பிறருடையது' என்று எண்ணும் தற்போதம் அல்லது சீவபோதம் எழும். அதனை அச்சிவதரிசன முறையில் சிந்தித்து அடக்கித்

தன் செயலற்றுச் சிவத்தில் ஒன்றிஇருத்தலே சிவயோகம். இதுவே உண்மை யோகம் ; ஏனை யோகம் பொது யோகமே.

சிவயோகத்தில் நிலைத்து நிற்கும்பொழுது சிவானந்தம் தோன்றுமாகலின் அதனை நுகர நுகர அஃது ஒருகாலைக்கொருகால் மிகுந்து பெருகி, ஆன்ம அறிவைத் தன்னுள்ளே விழுங்கிக்கொள்ளும். "யானுகிய என்னை விழுங்கி, வெறுந் தானுய் நிலை நின்றது தற்பரமே" என்றது இந்நிலையையேயாம். ஆன்மபோதம் அறவே மூழ்கடிக்கப்பட்ட பின்னர், ஆன்மா தன்னையோ பிறரையோ, பிற பொருள்களையோ உணரும் நிலைமை ஏது? ஆகவே அந்நிலையில் சொல் இல்லை; செயல் இல்லை; மனம் இல்லை; இரவில்லை; பகல் இல்லை; எதுவுமே இல்லை. இதுவே சிவபோகம். இதற்குமேல் ஆன்மா அடையவேண்டிய பயன் யாதொன்றும் இல்லை. இச்சிவானந்தத்தை இடையருது அனுபவித்தற்கு உடம்பு ஒரு சிறு தடையாகும். அது நீங்கினுல் நிறைபேரின்ப நிலையாகிய பரமுத்தி நிலை வாய்த்துவிடும்.

இங்ஙனம் கூறப்பட்ட தசகாரியங்கள் மேற்கூறியவாறு முறையாகக் கூறப்பட்டனவாயினும், அவை ஒன்று நிகழ்ந்து முடிந்த பின்னர்த்தான் மற்ருென்று நிகழும் என்பது பொருளன்று. ஒன்று பெரிதும், மற்ருென்று சிறிதும், இன்னுென்று அதனிற் சிறிதுமாக எல்லாம் உடன் நிகழ்வனவே. ஆகையால் பெரிதாய நிலைபற்றியே பெயர் கூறப்படுவது என்க.

எனவே, கீழ்க்கீழ் உள்ளவை நிலைபெறுதல் மேன்மேல் உள்ளவற்றினுலாம். ஆகவே, தத்துவ தரிசனத்தால், தத்துவ ரூபம் நிலைபெறும். ஆன்மரூபத்தால் தத்துவ தரிசனம் நிலைபெறும். ஏனையவற்றையும் இவ்வாறே கண்டுகொள்க. இதனை, மலை ஏறுவார் சிறிது மேற்சென்றபொழுது கீழ்உள்ள பொருள்கள் தெளிவாய்த் தோன்றுதல் போலவும், மிகவும் மேலே சென்று விட்டபொழுது கீழே உள்ள பொருள்கள் தோன்ருது மறைதல் போலவுமாகக் கொள்க.

( தொடரும் )

# " கொழிதமிழ்க் கூடலில் கொன்றை வேணியான் "

வித்துவான். திருமதி. ப. நீலா

(மலர் 29, இதழ் 4, பக்கம் 216ன் தொடர்ச்சி)

## 28. நாகம் எய்தது.

செங்கண்மால் விடைமேல் விடங்கர் செருக்களத்திடை வாளெடுத்து அங்கம் வெட்டிய ஆடல் கண்டோம். தமிழ் மாறனும் பாண்டியன் அனந்தகுணனை அழிக்க அமணர்விட்ட வெங்கண்வாளரவைத் துணித்து விளித்தவாறு இனிக் காணலாம்.

### கோதிலாக் குணத்தான் :-

அனந்தகுணன் தன் குலதெய்வமான மதுரைப் பெருமானிடம் அளவற்ற நேயம் பூண்டவன். அது மட்டுமில்லாமல் ஐந்தெழுத்து, உருத்திராட்சம், திருநீறு இவைகளையே மெய்ப் பொருளென்று கருதி பக்திபூண்டவன். தன் தந்தையான குலோத்துங்க பாண்டியனையும் விஞ்சும் பக்தி, பெருமை இவற்றோடு செங்கோல் செலுத்தி வந்தான். அவனது ஆட்சிக்குட்பட்ட திருநாடு திருவைந்தெழுத்து ஒலியாலும், திருநீற்றொளியாலும் அக, புற, இருள் நீங்கி சிவவேடமாகப் பொலிந்தது.

### வெஞ்சமணர் வெகுண்டனர் :

நாயினுங் கடையரான நன்மையெண்ணுச் சமணர் எண்ணுயிரம்பேர் பாண்டியனின் சிறப்பையும், நாட்டின் நன்னிலையையும் பொறுக்காதவர்களாகி அழல் தோய்ந்த இரும்பென - மானமென்ற தீச்சுட வெகுண்டெழுந்தனர். வஞ்ச வேள்வியொன்று (ஆபிசார யாகம்) செய்து தென்னவனை அழிக்கத் திட்டந்திட்டினர்.

ஒருகாத எல்லேயில் வேள்விக்குண்டம் அமைத்தனர். அதனினின்றும் எழுந்த விடப்புகையினுல் வானத்து உடுக் களும் பொரியெனச் சிதறின. வஞ்ச வேள்வியிலிருந்து எழுபவனேப்போல ஒரு அரக்கன் இருள்தூங்கும் வாயோடு இருபாலும் பகிர்ந்தமதி செருகியதுபோல் விடங்கசியும் எயிறு களும், கோபக்கனல்வீசும் கண்களும் கொண்டு மலேயோ என்று மலேக்கும்படித் தோன்றினன். கொடியோர்களான சமணர்களே நோக்கித் தன்பசிக்கும், தாகத்திற்கும் இலக்கு எது என்று கேட்டான். 'மீனவனே மதுரையோடு எதிர்த்து எடுத்து விழுங்கி வருதலே உனக்கு நாங்களிடும் கட்டளே என்றனர்.

பாயுடையார் ஆணேப்படி விடமாகப் படிவங் கொண்ட அரக்கன் அண்டமுகடு இடிக்கும்படியான உடலும், விடம் ஊறிச் சொரிதுளே எயிறும், வடவைத்தீ காலும் கண்களும் பெற்று ஊர்ந்து செல்கிருன். மூச்சு விட்ட இடங்களி லெல்லாம் பூமி பிளவுபட்டது ; பைங்கூழ் கருகின ; மேகஞ் சுவறின. இப்படிக் கோபக்கனலோடு மதுரையை யழிக்க வருகிருன்.

**கண்டவர் விண்டனர் :-**

கூடலின் மேற்றிசையில் இடியென முழங்கிவரும் விட நாகங் கண்டு கலங்கிய நகரத்தார் கௌரியனின் திருவடி பணிந்து, அண்ட அகிலங்களே ஒருவாயிலிட்டு விழுங்க வரு வதைப்போல் வாய்பிளந்து வருகின்ற நாகத்தின் செய்தி சொன்னர்கள். சற்றுங் கலங்காத மீனவன் ‘ முன்னெரு சமயம் அவர்கள் விட்ட யானேயை எம்பெருமான் அழித்து, நம்மைக் காத்தது போல இப்போதுங் காத்திடுவார் கவலற்க ’ என்று கூறிவிட்டுத் திருக்கோயிலுள் சென்று செம்மேனியம்மானே வணங்கினன்.

“ மற்றிது முனமத கரிவிட்டோர்
வரவிட வருவதையென எண்ணம்
உற்றிது தனேயும் விளித்தற்கெம்
உடையவர் விடையவர் விடநாகஞ்
சுற்றிய சடையினர் உளரென்னுச்
சுரருலகு இழிசுடர் எனநிற்குங்
கற்றளி யிடையுறை யிறைமுன் போய்க்
கனேகழ லடிதொழுது அறைகிற்பான்.

**அரவினை மாய்த்தான் :-**

வழிவழியடிமை செய்யும் தென்னவனுக்கு அங்கயற்கண்ணி பங்கன் அருள் செய்தான். ஈசனருள் பெற்றுப் பகுவாயுடன் படம் பரப்பி வரும் பாம்பினைச் சந்தித்தான். இடியேறென முழக்கி வில்லில் கொடிய அம்புகளைப் பூட்டி அரவின்மேல் எய்தான். தென்னவன் விடுத்த சரங்களையெல்லாம் உரகன் வெறுந்துகள்படக் கடித்துமிழ்ந்தான்.

பாண்டியன் புராரியின் பங்கயச் சேவடி சிந்தித்து பிறை வாயம்பினை எடுத்துவிட்டான். கோளரவின் வளையுடல் துணி பட்டது. குருதி அருவியெனக் கொட்ட தன்நெஞ்சத்தடக்கிய நஞ்சினைக் கக்கினன் அரக்கன். அந்நஞ்சு விரைந்து பரவி சோலை, குளம், கிணறு, சதுக்கம், கழகம், கோட்டை, மாடம், உப்பரிகை, மேடை கோபுரமென்று எங்கும் பரவி மக்களை மயக்கியது.

**அருங்கடல் சிந்திய அமுது :-**

நிலைதளர்ந்து, மெய்வியர்த்து, உரைதடுமாறி நின்ற மாறன் கூடற்கோயிலையடைந்து வித்தின்றி விளைந்த வேத முதல்வனடி தாழ்ந்து நஞ்சிலிருந்து நகரமக்களை, உயிர்களை உய்யக்கொள்ளுமாறு வேண்டினன். 'இந்நகரை அழிக்க வந்த [1]கடலை வற்றச்செய்தாய். [2]வருணன் விட்ட மழையைத் தடுத்து இத்தலத்தை நான்மாடக் கூடலாக்கினாய். [3]அமணர்கள் ஏவிய கொடிய யானையினைக் கொன்று அட்டாலைச் சேவகராக நின்றாய். இதுபொழுது வந்துள்ள இடரினின்றும் நீயே எம்மைக் காக்கவேண்டும்' என்ற எளிய மொழிக்கிரங்கிய ஏழை பங்காளன், அருட்கடலாம் ஆதி நாயகன் தன் அவிர்சடையிலணிந்துள்ள மதிக்கொழுந்தின் தண் துளியில் சிறிது பிலிற்ற அது பாலிற்பட்ட பிரைபோல் பரந்து அந்நகரை மீண்டும் மதுரா நகர் ஆக்கியது. நஞ்சிடர் நீங்கிய மக்கள் தங்கள் மன்னனோடு தெய்வத்தைப் பரவினர். மக்கள் மனம் மகிழ, பாண்டியனும் மண்காவல் செய்து வந்தான். (வளரும்).

---

[1], [2], [3] திருவிளையாடல்கள் இத்தொடர்ச்சியின் 18, 19, 22-ம் கட்டுரைகளாகும்.

தருமையாதீனப் பல்கலைக் கல்லூரி ஸ்ரீ குருஞானசம்பந்தர் மாணவர் கழகத்தின் ஆண்டு விழாவும், ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குரு மகாசந்நிதானத்தின் கனகாபிஷேக நினைவு சைவ சித்தாந்தக் கல்லூரி சைவ சித்தாந்தவகுப்புத் தேர்ச்சிப் பரிசளிப்பு விழாவும் கல்லூரி வழிபாட்டு மன்றத்தில் நடைபெற்றன கல்லூரிப் பொறுப்பு முதல்வர் திரு. வி. சா. குருசாமி தேசிகர் அவர்கள் சிறப்புச் சொற்பொழிவாளரை வரவேற்று மாலை அணிவித்துச் சிறப்பித்தார்கள். மாணவர் கழகத் துணைச் செயலர் கீ. இராச கோபாலன் என்ற மாணவர், மாணவர் கழக ஆண்டு அறிக்கை வாசித்தார்.

பின்னர் சென்னை. திரு. ஔவை. து. நடராசன் எம். ஏ., அவர்கள் மாணவர்களுக்குப் பல அறிவுரைகளைக் கூறி சிறப் புரையாற்றிப் பரிசுகளை வழங்கினார்கள். கட்டுரை, கவிதை, பேச்சுப் போட்டிகளில் முதல் இரு தகுதி பெற்றவர்களுக்குப் பரிசுகள் வழங்கப்பெற்றன. பரிசுப் பொருள்களாக நூல்கள் பலவற்றை ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானம் அவர்கள் வழங்கியருளினார்கள்

சைவ சித்தாந்த வகுப்பில் நான்காம் ஆண்டில் பயிலும் மாணவர்களுக்குத் தேர்வு நிகழ்த்தி அதில் தகுதிபெற்ற மாணவர் களுக்கு மூன்று பரிசுகளும், பிற மாணவர்களுக்குச் சான்றிதழ் களும் வழங்கப்பெற்றன. முதற் பரிசாக ஐம்பது வெண் பொற்காசுகளும், இரண்டாம் பரிசாக இருபத்தைந்து வெண் பொற்காசுகளும் மூன்றும் பரிசாக ஒரு சிறந்த நூலும் ஸ்ரீலஸ்ரீ கயிலை குருமகாசந்நிதானம் அவர்கள் அருளால் வழங்கப்பெற்றன

ஆசிரியர்கள் சார்பில் திரு. சி. அருணைவடிவேல் முதலியார் அவர்களும், துணைச்செயலரும் நன்றி நவின்ற பின்னர் நாட்டு வாழ்த்துடன் விழா இனிது நிறைவுற்றது.

## பங்குனித் திங்கட் பெருவிழா

வேளூரில் :

திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனத்திற்குச் சொந்த மான வேளூர் ஸ்ரீ வைத்தியநாத சுவாமி தேவஸ்தானத்தில் பங்குனித்திங்கட் பெருவிழா 13—3—70 வெள்ளிக்கிழமை முதல் 22—3—70 ஞாயிற்றுக்கிழமை முடிய உள்ள நாட்களில் மிகச்

சிறப்பாக நடைபெற்றது. 13—3—70 வெள்ளிக்கிழமை கொடியேற்றமும், 17—3—70 செவ்வாய்க்கிழமை சகோபுரக் காட்சியும், 19—3—70 வியாழக்கிழமை திருத்தேர்த்திருவிழாவும், 22—3—70 ஞாயிற்றுக்கிழமை சித்தாமிர்தத் தீர்த்தத்தில் பஞ்சமூர்த்திகள் ருத்ரபாத தீர்த்தம் கொடுத்தருளலும், கொடியிறக்கமும் நடைபெற்றன. விழாவையொட்டி நாள்தோறும் மாலை 6 மணிக்குச் சமயச் சொற்பொழிவுகள் தொடங்கி நடைபெற்றன.

13, 14, 15—4—70 ஆகிய வெள்ளி சனி, ஞாயிற்றுக்கிழமைகளில் மன்னன்பந்தல் அ. வ. அ. கல்லூரித் தமிழ் விரிவுரையாளர்கள் திரு. அ. கலியபெருமாள் எம். ஏ., திரு. தி. வ. காந்திமதிநாதன் (பேராசிரியர்) திரு, சொ, சிங்காரவேலன் எம். ஏ., ஆகியோர் ''பாலருவாயர் பைந்தமிழ்'', ''அப்பர் அருந்தமிழ்'', ''நம்பியாரூரர் நற்றமிழ்'' என்ற தலைப்புக்களில் விரிவுரையாற்றினர். 16—3—70 திங்கட்கிழமையன்று திருமுறை விழாவும், தேவார வகுப்பு ஆண்டு விழாவும் நடைபெற்றது. அன்று தருமையாதீனப் பல்கலைக் கல்லூரிப் பேராசிரியர், திரு சி. அருணைவடிவேல் முதலியார் அவர்கள் ''மணிவாசகர் அருட்டமிழ்'' என்ற தலைப்பில் சொற்பொழிவாற்றினார்கள். ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானம் அவர்கள் அருளால் வழங்கப்பெறும் பரிசுகளைத் தேவார வகுப்பு மாணவர்களுக்கு வழங்கினார்கள். யானைமேல் திருமுறைகள் ஒப்பனை செய்யப்பெற்றுப் பண்ணிசைவாணர்களின் திருமுறைப் பாராயணத்தொடு திருவிதியுலா நிகழ்ந்தது.

17, 18—3—70 ஆகிய செவ்வாய். புதன்கிழமைகளில் தருமையாதீனப் பல்கலைக் கல்லூரிப் பேராசிரியர்கள் திருமதி. ப. நீலா, திரு. வி. சபேசன் ஆகியோர் முறையே ''இசைப்பா இன்றமிழ்'', ''சேக்கிழார் செந்தமிழ்'' என்ற தலைப்புக்களில் சொற்பொழிவாற்றினர். அன்பர்கள் பலர் வந்து கலந்துகொண்டு கேட்டு மகிழ்ந்தனர்.

திருபுவனத்தில் :

திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனத்திற்குச் சொந்தமான திருபுவனம் ஸ்ரீ கம்பகரேசுவரசுவாமி தேவஸ்தானத்தில் உருத்திரபாதத் திருநாள் 13—3—70 வெள்ளிக்கிழமை முதல் பத்து நாட்கள் சிறப்பாக நடைபெற்றது. 13—3—70 வெள்ளிக்கிழமை கொடியேற்றமும், 17—3—70 செவ்வாய்க்கிழமை சகோபுரத்தில் இடபவாகனக் காட்சியும், 19—3—70 வியாழக்கிழமை

திருக்கல்யாணமும், 21—3—70 சனிக்கிழமை திருத்தேர்த் திருவிழாவும், 22—3—70 ஞாயிற்றுக்கிழமை உருத்திரபாதத் தீர்த்தமும், கொடி இறக்கமுமாக விழா சிறப்புற நடைபெற்றது.

29—3—70 ஞாயிற்றுக்கிழமையன்று ஸ்ரீ சரபர் உற்சவம் நிகழ்ந்தது. அன்று காலையில் ஸ்ரீ சரபருக்கு ஏகதின லக்ஷார்ச்சனையும், இரவு வெள்ளி இரதத்தில் ஸ்ரீ சரபர் திருவிதியுலாக் காட்சியும் நடைபெற்றது.

திருவிழா நாட்களில் 14—3—70 சனிக்கிழமை மாலை 6 மணி முதல் திரு. சி. அருணவடிவேல் முதலியார், திரு. தா. ம. வெள்ளைவாரணம், திரு. வி. சபேசன், திரு. சொ. சிங்காரவேலனர் எம். ஏ., டிப் - லிங்., திருவாவடுதுறை ஆதீனம் திருவிடைமருதூர் உயர்பள்ளித் தமிழாசிரியர் திரு. பொன். சுப்பிரமணியம் ஆகியவர்களால் "ஞானத்தமிழ்", "அப்பர் அருந்தமிழ்", "சுந்தரர் செந்தமிழ்", "மணிவார்த்தை", "சேக்கிழார் செந்தமிழ்" ஆகிய தலைப்புக்களில் சொற்பொழிவுகள் நிகழ்த்தப்பட்டன. அன்பர்கள் பலர் கேட்டு மகிழ்ந்தனர்.



---

## கயிலைக் குருமணி காப்பு

திருந்து திருமுறைச் சீர்வெளி யீட்டால்
அருந்தமிழ் ஆழ்ந்துபயில் ஆய்வால் — பெருந்தனமாம்
கைலைச் சிவனருளைக் காட்டுதலால் எம்மவர்க்குக்
கைலைக் குருமணியே காப்பு.

ஔவை. நடராசன்.

24—3—70

---

உ

சிவமயம்

# சைவ சித்தாந்த சாத்திர வகுப்பு

## திருத்தவத்துறை (லால்குடி)

திருத்தவத்துறை (லால்குடி) தம்பாச்சியாப் பிள்ளை அறநிலையத்தில் ஆண்டுதோறும் கோடையில் நடைபெறும் சைவ சித்தாந்த சாத்திர வகுப்பிற்கு விண்ணப்பங்கள் வரவேற்கப்படுகின்றன. வகுப்பு 15—5—70 முதல் 29—5—70 முடியக் காலை, மாலை இருவேளையும் நடைபெறும்.

சித்தாந்தகலாநிதி. பேராசிரியர்,

**உயர்திரு. ஔவை. சு. துரைசாமி பிள்ளை அவர்கள்**

காலையில்

**சிவஞான போதமும்,**

**வித்துவ்ான். திரு. ந. சிவப்பிரகாச தேசிகர் அவர்கள்**

மாலையில்

**தேவாரமும்**

நடத்துவார்கள்.

தமிழ் வித்துவான் அல்லது புலவர் பட்டம் பெற்றவர்களும் தமிழ் எம். ஏ., பட்டம் பெற்றவர்களும் இவ்வகுப்பில் கலந்து கொள்ளுதற்கு உரியர். வகுப்பில் கலந்துகொள்பவர்கட்கு இருவேளை உணவும், தங்கும் இடமும் அளிக்கப்படும்.

1—5—70 தேதிக்குள் வந்துசேரும் விண்ணப்பங்கள் மட்டுமே ஏற்றுக்கொள்ளப்படும். விண்ணப்பம் அனுப்ப வேண்டிய முகவரி :—

ஜி. வரதராஜன் பீ. ஏ.,
7—வடக்குவீதி, லால்குடி,
திருச்சி மாவட்டம்.



# எதிர்காலம்

ஜோதிஷார்ணவம்,

**திரு. K. முத்துஜோதிடர்**

( சாதாரணஹூ சித்திரைமீ 1உ முதல் 31உ முடிய )

( 14—4—70 முதல் 14—5—70 முடிய )

ஸாதாரணஹூ சித்திரைமீ 1உ திருமூர்த்தி ஸ்வரூபியும் லோகபிரகாசகருமாகிய ஸ்ரீ சூரியபகவான் நாளது ஸௌம்ய பங்குனிமீ 31உ ஸோமவாரம் புனர்பூச நக்ஷத்திரம் 3ம் பாதமும் விருச்சிக லக்கினமும், கூடிய சுபயோக சுபதினத்தில் உதயாதி 37 நாழிகை 17 விநாடியளவில் மேஷராசி பிரவேசம் செய்கிறார்.

ஸாதாரண வருஷத்திய ஜகஜ்ஜாதக சக்கிரம்

| | | | |
|---|---|---|---|
| | சூ - புத சு - சனி | செவ் | சந்தி |
| ராகு | ஜகஜ் ஜாதகம் | | |
| | | | கேது |
| | ல | குரு | |

ஷ ஜகல்லக்கின பிரவேசகால பலத்தால் உலகெங்கும் அமைதியுடன் சுபிக்ஷகரத்தோடு மாதம் மும்மாரி பெய்து

கொண்டு பிரஜைகள் தர்மம் தவருமல் ஸந்தோஷகரமாய் வாழ ஸ்ரீ ஸர்வேசுவரன் அருள்புரிவாராக. ஸமஸ்தமங்களாநி பவந்து. சுபம்.

1. மேஷம் - அசுவதி - பரணி - கார்த்திகை ¼

மேஷ ராசி 9 பாதங்களும், சுபத்தைத்தரும். நஷ்டமான பொருள் வந்துசேரும் ஆரோக்யம் உண்டுபண்ணும் தூர தேசத்திலிருந்து அழைப்பு பத்திரம் வரும், ஜீவனம் ஓங்கும். செவ்வாய், புதன் சுபமாகும்.

2. ரிஷபம் - கார்த்திகை ¾, ரோஹிணி - மிருகசீர்ஷம் ½

ரிஷபராசி 9 பாதங்களும் மிசிரமான பலன்களைத் தரும். வரவு செலவு சமமாகும். புதிதாக உத்தியோகம் கிடைக்கும். குடும்ப சுகம் அதிகமாகும். எதிர்பாராத நன்மைகள் உண்டாகும். வியாழன், வெள்ளி சுபமாகும்.

3. மிதுனம் - மிருகசீர்ஷம் ½, திருவாதிரை - புனர்பூசம் ¾

மிதுனராசி 9 பாதங்களும் பூர்ணமாக சுபத்தைத் தரும் ஆரோக்யம் உண்டுபண்ணும். குடும்ப சுகம் அதிகமாகும். ஜீவனம் விருத்தியாகும். மேலோர் பெரியோர்களின் ஆசிகள் கிடைக்கும். மனம் சாந்தி அடையும். சனி, ஞாயிறு சுபமாகும்.

4. கடகம் - புனர்பூசம் ¼, பூசம் - ஆயில்யம்

கடக ராசி 9 பாதங்களும் சுபத்தைத் தரும். புதிதாக உத்தியோகம் கிடைக்கும். ஸ்தாவர ஜங்கம சொத்துக்கள் வாங்குதல் மூலம் விசேஷ லாபம் ஏற்படும். இல்லற சுகம் அதிகமாகும். தெய்வபலம் காப்பாற்றும். திங்கள், செவ்வாய் சுபமாகும்.

5. சிம்மம் - மகம் - பூரம் - உத்திரம் ¼

சிம்ம ராசி 9 பாதங்களும் சுபத்தைத் தரும். உத்தியோகத்தில் மேல்பதவி கிடைக்கும். உறவினர்களால் உபகாரம் ஏற்படும். குடும்பம் விருத்தியாகும். ஆரோக்யம் தரும். புதன், வியாழன் சுபமாகும்.

6. கன்னி - உத்திரம் $\frac{3}{4}$, ஹஸ்தம், சித்திரை $\frac{1}{2}$

கன்னியாராசி 9 பாதங்களும், மிச்ரமான பலனைத்தரும். குடும்பம் விருத்தியாகும். புத்திராதிகளால் நன்மை உண்டாகும். அனுவசியமாக தொந்திரவுகள் ஏற்பட்டு விலகும். ஈதி பாதைகள் இருந்துகொண்டே இருக்கும். வரவு செலவு சமமாக இருக்கும். ஜீவனம் குறைவு படாது. தெய்வபலத்தால் எல்லாம் நன்மையாகவே முடியும். வெள்ளி, சனி சுபமாகும்.

7. துலாம் - சித்திரை $\frac{1}{2}$, சுவாதி - விசாகம் $\frac{3}{4}$

துலா ராசி 9 பாதங்களும் பூர்ணமாக சுபத்தைத் தரும். ஜீவனம் விருத்தியாகும், எதிர்பாராத லாபங்கள் கிடைக்கும், தெய்வபலம் ஓங்கும். ஆரோக்யம் தரும். குடும்பம் விருத்தியாகும். புத்திராதிகளால் சுகம் உண்டாகும். ஞாயிறு திங்கள் சுபமாகும்.

8. விருச்சிகம் - விசாகம் - $\frac{1}{4}$, அனுஷம் - கேட்டை.

விருச்சிகராசி 9 பாதங்களும், மிச்ரமான பலனைத் தரும், அதிக உழைப்பும் ஆரோக்யக் குறைவும் காட்டும். வரவு செலவு சமமாக இருக்கும். ஜீவனம் ஓங்கும். வைத்திய செலவு உண்டாகும். தெய்வபலத்தால் எல்லாம் நன்மையாகும். செவ்வாய், புதன் சுபமாகும்.

9. தனுசு - மூலம் - பூராடம் - உத்திராடம் $\frac{1}{4}$.

தனுர்ராசி 9 பாதங்களும் சுபத்தைத்தரும். ஆரோக்யம் உண்டுபண்ணும். குடும்ப சுகம் உண்டாகும். புத்திராதிகளால் நன்மை உண்டாகும். அடிக்கடி சுபமான காரியங்கள் நடக்கும். ஜீவனம் விருத்தியாகும். வியாழன், வெள்ளி சுபமாகும்.

10. மகரம் - உத்திராடம் $\frac{3}{4}$ - திருவோணம் - அவிட்டம் $\frac{1}{2}$

மகரராசி 9 பாதங்களும் பூர்ணமாக சுபத்தைத்தரும். உத்தியோகத்தில் உயர்ந்த பதவிகள் கிடைக்கும். குடும்ப சுகம் ஓங்கும். புதிதாக வஸ்திராபரண சேர்க்கைகள் உண்டாகும்.

இல்லறசுகம் உண்டாகும். மேலோர் பெரியோர்களின் அன்பு கிடைக்கும். சனி, ஞாயிறு சுபமாகும்.

## 11. கும்பம் - அவிட்டம் ½, - சதயம் - பூரட்டாதி ¾.

கும்பராசி 9 பாதங்களும் சுபத்தைத்தரும்; ஆரோக்யம் உண்டுபண்ணும். வியாதிகள் தீரும். சஞ்சார பலன் ஏற்படும். பிரதிஷ்டாபலன் கிடைக்கும்; குடும்பம் ஓங்கும் புதிதாக வஸ்திராபரணசேர்க்கைகள் உண்டாகும். திங்கள், செவ்வாய் சுபமாகும்.

## 12. மீனம் – பூரட்டாதி ¼, - உத்திரட்டாதி - ரேவதி.

மீனராசி 9 பாதங்கள் பூர்ணமாக சுபத்தைத்தரும். தெய்வ பக்தியும் குருபக்தியும் சஞ்சார பலனும் ஏற்படும். ஆரோக்யம் தரும். புதிதாக பிரபுக்கள் தரிசனம் கிடைக்கும். தெய்வ பலம் ஓங்கும். எல்லாம் சுபமாகவே நடக்கும்.

சாதாரணவருஷத்திய மேஷ சங்கிரமணபிரவேச சுபபலன் குறிப்பு. ஷி வருஷ பலனும் இரவில் மேஷ சங்கிரமணத்தால் சுபபலன் ஏற்படும். உலக ஜாதகப்படி ஜகல் லக்கினம் விருச்சிகமாகி ராஜாமுதல் நவநாயகர்களும் உலக பிரவேச லக்கினத்துக்கு 6, 7, 8, 12ல் போய் அமைந்தபடியாலும் முக்கியமாக சந்திரனுக்கு 4 ஆதிபத்தியம் கிடைத்து அஷ்டமத்தை அடைந்தபடியாலும் ஷி வருஷ பலனை வர்ணிப்பதற்கு ஆயிரம் நாவு படைத்த ஆதிசேஷனாலும் விவரிக்கக் கூடாதாகையால் உலகில் கோடிக்கு ஒரு புண்ணிய புருஷர்களாவது இருப்பார்கள். அந்த உத்தமர்களுடைய ஆசீர்வாதத்தாலும் கடவுளையே நம்பின பக்தர்களின் பிரார்த்தனையாலும் சகலவித உத்பாத கிரக தோஷங்களும் மாறி நவநாயக கிரகங்கள் உலகத்தை முன்நின்று காப்பாற்ற சாதுக்கள் எல்லோரும்சேர்ந்து வருஷபிறப்பன்று பிரார்த்திப்போமாக. உலகம் செழித்து சுபிக்ஷம் ஏற்பட்டு பிரஜைகள் சந்தோஷமாய் ஜீவிப்பார்களாக.

சுபம்.

மதிப்புரை :

## திருஞானசம்பந்தர் வரலாற்றாராய்ச்சியும் தேவாரத் திறனாய்வும்

நூலாசிரியர்: செஞ்சொற்கொண்டல், வித்துவான், திரு. சொ. சிங்காரவேலனார், எம். ஏ., டிப்; லிங்., வெளியிட்டோர்: திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் 1/140 பிராட்வே, சென்னை.

சங்க காலத்திற்குப்பின் பக்திநெறி நம்நாட்டில் மேலோங்கித் தழைத்தது. தெய்வீக இலக்கியங்கள் பல பெருகி வளர்ந்தன. திருஞானசம்பந்தர் முதலிய அருளாளர்களும் நாயன்மார்களும் திருமுறை இலக்கியங்களை உலகம் வாழ உதவினர். சைவசமயத்திற்கு உரிய தமிழ்மறைகளாக அவை விளங்குகின்றன. அத்திருமுறைக் கருவூலங்களை ஆராய்ந்து அவற்றில் அமைந்துள்ள அரும்பெரும் கருத்துக்களை எடுத்துக்காட்டுவது பயன்தரும் பணியாகும். இந்த நற்பணியை மேற்கொண்டுள்ளது சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம். சைவத் திருமுறைகளுக்கு ஒளிநெறிக் கட்டுரைகள் என்னும் அரிய ஆராய்ச்சிக் கட்டுரைகளை வழங்கிய தணிகைமணி திரு. செங்கல்வராய பிள்ளை அவர்கள் நினைவாகப் பரிசுத்திட்டம் அமைத்து ஆண்டுதோறும் திருமுறைத் திறனாய்வுச் சொற்பொழிவு நிகழ்த்தி அதனை நூல் வடிவாக வெளியிடும் சிறந்த பணியை மேற்கொண்டுள்ளது சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம். இவ்வரிசையில் முதல் நூலாகத் திருஞானசம்பந்தர் வரலாற்றாராய்ச்சியும் தேவாரத் திறனாய்வும் என்ற நூலை எழுதி வெளியிட்டிருப்பவர் நமது செஞ்சொற்கொண்டல் வித்துவான். திரு, சொ. சிங்காரவேலன் எம். ஏ.. டிப். லிங்., அவர்கள்.

செஞ்சொற்கொண்டல் அவர்கள் தருமையாதீனப் பல்கலைக் கல்லூரியில் பயின்றவர். முறையாகத் தேவாரப் பயிற்சி சைவ சித்தாந்த நூற்பயிற்சி பெற்றவர். ஆதீனப் பல்கலைக் கல்லூரியில் முதல்வராகப் பல்லாண்டுகள் பணிசெய்தவர். ஞானசம்பந்தம் துணையாசிரியராக இருந்து சிறந்த கட்டுரைகளை வழங்கியவர். பல்லாண்டுகள் சமய இலக்கியத் துறைகளில் பழகிய அனுபவத்தால் இவர்தம் திறனாய்வு நூல் தனிச்சிறப்புடையதாக விளங்குகிறது. இந்நூலுள் ஞானசம்பந்தர் வரலாற்றினை அகச்சான்றுகளோடு ஆராய்ந்துள்ளார். ஞானசம்பந்தர் முருகன் அவதாரமா? ஞானசம்பந்தர் காலம், யாப்பமைதி, உயிரியல் நுட்பம், இயற்கை நலம், பழந்தமிழ்க்கருத்து வளம் முதலிய பகுதிகள் மிகச்சிறந்த முறையில் ஆராயப்பெற்றுள்ளன. சம்பந்தர் தேவார அமைப்பும் அழகும் பண்டைத் தமிழிலக்கண மரபைப் பின்பற்றியிருப்பதையும் ஆங்கில நூலமைப்புக்களுடன் ஒத்திருப்பதையும் மேற்கோள்களுடன் விளக்கியுள்ளார். அகத்துறைப் பாடல்களுக்கு ஏற்ற ஆங்கில மேற்கோட் செய்யுட்களையும் காட்டியுள்ளார். இவரது மொழி நடை மிகவும் இனியதாயமைந்து விளங்குகிறது. —வி. சா. கு.

GNANASAMBANDAM Regd. No. M. 4454.

உ

திருக்கயிலாயபரம்பரைத்
தருமையாதீனம்



# வேளூர் தேவஸ்தானம்

வைத்தீஸ்வரன்கோவில்

சாதாரண ஆண்டு கிருத்திகா நக்ஷத்திரம்

## ஸ்ரீ செல்வமுத்துக்குமாரசுவாமி அபிஷேகம்

| | | | |
|---|---|---|---|
| சித்திரை | 23 | 6— 5—70 | புதன்கிழமை |
| வைகாசி | 20 | 3— 6—70 | புதன்கிழமை (மண்டலாபிஷேக கிருத்திகை) |
| ஆனி | 16 | 30— 6—70 | செவ்வாய்க்கிழமை |
| ஆடி | 11 | 27— 7—70 | திங்கட்கிழமை |
| ஆவணி | 8 | 24— 8—70 | திங்கட்கிழமை |
| புரட்டாசி | 4 | 20— 9—70 | ஞாயிற்றுக்கிழமை |
| ,, | 31 | 17—10—70 | சனிக்கிழமை |
| ஐப்பசி | 28 | 14—11—70 | சனிக்கிழமை |
| கார்த்திகை | 26 | 11—12—70 | வெள்ளிக்கிழமை |
| மார்கழி | 23 | 7— 1—71 | வியாழக்கிழமை |
| தை | 22 | 4— 2—71 | வியாழக்கிழமை |
| மாசி | 19 | 3— 3—71 | புதன்கிழமை |
| பங்குனி | 16 | 30— 3—71 | செவ்வாய்க்கிழமை |

Printed & Published by, K. Sundaresa Iyer, Agent Dharmapuram Adhinam at the Gnanasambandam Press, Dharmapuram (Mayuram) 10—4—70.